# நகரத்தார் இதழ்

(சமூக இலக்கிய மாத ஏடு)



திருச்சி மலைக்கோட்டை

திருவள்ளுவர் ஆண்டு 2021—மார்கழி டிசம்பர்-1990

ஆசிரியர் : சுப. செந்தமிழன்

ஓம்

தாய் தீப்பாய்ந்தாளுக்கு வணக்கம்
தமிழ் அன்னைக்கு வணக்கம்

# நகரத்தார் இதழ்

மலர் : 4 டிசம்பர் – 1990 இதழ் : 7

□

ஆசிரியர் :

**சுப. செந்தமிழன்**
5, யானைக்காரச் சந்து,
மீனாட்சி அம்மன் கோவில் தெரு,
மதுரை - 625 001.

□

தமிழ்நாடே வாழ்க—எம்
தாய் நாடே வாழ்க
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர்தழையும் விழுமிய தமிழ்நாடே வாழ்க!

—புரட்சிக் கவிஞர்

# திருச்சி நகரத்தார் சங்கம்

நகரத்தார் சங்கங்களில் பிள்ளையார்பட்டியில் நடத்தும் கூட்டுத் திருமணங்களின் மூலம் திருச்சி நகரத்தார் சங்கம் தனிப் புகழ் பெற்றுள்ளது என்றால் அது மிகையில்லை. நாளை என்ற பேச்சுக்கே அங்கே இடமில்லை. இப்பொழுது செய், உடனடியாகச் செய் என்ற அடிப்படையில் திருச்சி நகரத்தார் சங்கம் செயல் படுகின்றது. தனது சங்கக் கட்டிடத்தினை திருச்சிக்குச் செல்லும் நம்மவருக்கு உதவியாக இருக்கட்டும் என்ற அடிப்படையில் அங்கே சங்கக் கட்டிடத்தில் தங்குவதற்கு வசதி செய்து கொடுத்துள்ளது பாராட்டத்தக்கது. 1948-ல் தொடங்கப்பட்ட திருச்சி நகரத்தார் சங்கம் 1969-ல் தனக்கென்று தனிக்கட்டிடத்தில் சிறப்பாக செயல்படத் தொடங்கியது.

முகவரி : நகரத்தார் சங்கம், 2, ஒத்தமால் தெரு, திருச்சி-1 மலைக்கோட்டைக்கு அருகில், அதாவது உச்சிப் பிள்ளையார் கோவில் அருகில் திருச்சி நகரத்தார் சங்கக் கட்டிடம் உள்ளது. இன்று அது புதுப் பொலிவுடன் சிறப்பாகச் செயல்படுகின்றது. முன்னாள் தலைவர் லெ. நா. லெட்சுமணன் செட்டியார் அவர் களும், இந்நாள் தலைவர் சுப. அருணாசலம் செட்டியார் அவர்களும் நான் அறிந்தவர்கள். இனிய பண்பாளர்கள். மற்ற முன்னாள் தலைவர்களும் சங்க வளர்ச்சியில் மிக ஆர்வத்துடன் ஒன்றுபட்டு செயல்படுகின்றனர். சங்க மேலாளர் அலவாக்கோட்டை நாராயணன் செட்டியார் அவர்களும் ஆர்வமுடன் செயலாற்று கின்றார். அங்கு தங்க ஒரு நாளைக்கு நபர் ஒன்றுக்கு மகமை ரூ 2/- ஆகும். சங்கச் செயலாளராக பழநியப்பன் அவர்கள் இருக் கின்றார்கள். சுருக்கமாகச் சொன்னால், ஒரே வரியில் சொன்னால் திருச்சி நகரத்தார் சங்கம் தனது நல்ல செயல்களின் மூலம் நமது இனத்திற்கே பெருமை தேடித் தருகின்றது. நம்மவருக்கு வழி காட்டியாகவும் உள்ளது.

---

நீங்கள் கடவுளின் குழந்தைகள். அழியாத பேரின்பத்தின் பங்குதாரர்கள். புனிதமும் பூரணத்துவமும் பெற்றவர்கள். மண் ணுலகின் தெய்வங்களே, நீங்களா பாவிகள்! அப்படி மனிதனை அழைப்பதுதான் பாவம். அது மனித இயல்பின்மீதே சுமத்தப் படும் பழிச் சொல்லாகும். ஓ சிங்கங்களே! எழுந்து வாருங்கள். நீங்கள் செம்மறி ஆடுகள் என்ற மயக்கத்தை உதறித் தள்ளுங்கள். நீங்கள் அமரத்துவம் பெற்ற ஆன்மாக்கள், சுதந்திர ஆன்மாக்கள், அழியாத திருவருளைப் பெற்றவர்கள்.

—விவேகானந்தர்.

---

# அருள்மிகு நடராஜர், சிதம்பரம்.

தற்பதமாய்ப் பரபதமாய்த் தாவிலரு பூதியதாய்
அற்புதமாய் ஆரமுதாய் ஆனந்தநிலைய வொலிப்
பொற்பினதாய்ப் பிரிவிலதாய்ப் பொருளாகி அருள்தருஞ்
சிற்பரமாம் அம்பரமாம் திருச்சிற்றம்பலம் போற்றி.

—கோயிற்புராணம்,

ஈட்டிய வினைப்பயன் எவற்றையும் மறைத்துநின்று
ஊட்டுவதாகும் நின் ஊன்றிய பதமே
அடுத்த இவ்வுயிர்கட்கு அளவில் பேரின்பம்
கொடுப்பது முதல்வ! நின் குஞ்சித பதமே.

—குமரகுருபரர்.

பூலோக கயிலாயகிரி சிதம்பரம் அல்லால்
புவனத்தில் வேறும் உண்டோ!
சாலோக சாமீப சாரூப சாயுச்சிய
சபைவாணர் ஆனந்தத் தாண்டவம் புரிவதால் (பூலோ)

—முத்துத்தாண்டவர்.

---

மார்கழி 13உ 28-12-90 வெள்ளி வைகுண்ட ஏகாதசி
மார்கழி 16உ 31-12-90 திங்கள் ஆருத்ரா தரிசனம்

---

நீ எதை நினைக்கிறாயோ அதுவாகவே ஆகிறாய். நீ உன்னைப் பலவீனன் என்று நினைத்தால் பலவீனனாகவே நீ ஆகிவிடுவாய். நீ உன்னை வலிமையுடையவன் என்று நினைத்தால் வலிமை படைத்தவனாகவே ஆகிவிடுவாய்.

'இல்லை' என்று ஒருபோதும் சொல்லாதே. 'என்னால் இயலாது' என்று ஒருநாளும் சொல்லாதே. ஏனெனில் நீ வரம்பில்லா வலிமை பெற்றவன். உன்னுடைய உண்மை இயல்போடு ஒப்பிடும்போது, காலமும் இடமும்கூட உனக்கு ஒரு பொருட்டல்ல. நீ எதையும் எல்லாவற்றையும் சாதிக்கக்கூடியவன். சர்வ வல்லமை படைத்தவன் நீ

—விவேகானந்தர்.

---

உண்மையைத் தவிர வேறு எல்லாவற்றையும் புள்ளி விவரங்களைக் கொண்டு நிரூபிக்க முடியும்.

—சார்கெகன்சி.

---

இலக்கியம்

# எங்களூர்ப் புலவர்கள்

## கண்ணுநந்த சுவாமிகள், ஐயாகருப்பன் செட்டியார்

பேராசிரியர் சுப. ராம. சுப. இராமனுதன் செட்டியார்

### கண்ணுநந்த சுவாமிகள்

நாட்டரசன்கோட்டையில் துறவறம் ஏற்று கண்ணுடையம்மன் கோவில் அருகே மடம் அமைத்து அன்னை கண்ணுத்தாளை வணங்கி வாழ்ந்து வந்தார். இவர் கண்ணுடையம்மன் வாலை அந்தாதி என்ற நூலை இயற்றியுள்ளார். இவர் விசுவகர்ம குலத்தைச் சார்ந்தவர். 1916-ல் ராம. நா. கண்ணப்ப செட்டியார் அவர்களின் முயற்சியால் கண்ணுடையம்மன் வாலையந்தாதி நூல் வடிவமாக வெளி வந்தது.

### ஐயாகருப்பன் செட்டியார்

நகரத்தார் மரபினைச் சார்ந்த நாராயணன் செட்டியார் மகன். இவர் சென்ற நூற்றாண்டில் வாழ்ந்தவர், இவர் பாடிய பதினோரு பிரபந்தங்கள் பல்வேறு காலங்களில் வெளியிடப் பெற்றுள்ளன. 1985-ல் சோழீசர் திருக்கோயில் திருக்குட நன்னீராட்டு விழா நடைபெற்றபோது அவரது பேரன் நா. கரு. சிவ. கருப்பன் செட்டியாரவர்கள் முதல் எட்டு நூல்களையும் தொகுத்து ''பனசைப் பதிமாலை'' என்ற பெயரில் அச்சிட்டு வெளியிட்டார்.

### சில நூல்கள்

1) திருப்பனசை சோழீசர் மாலை
2) திருப்பனசை சோழீசர் பதிகம்
3) திருப்பனசை கண்ணுடையம்மை மாலை
4) திருப்பனசை கண்ணுடையம்மைப் பதிகம்
5) திருப்பனசை கண்ணுடையம்மைக் கும்மி
6) திருப்பனசை வேங்கடாசல மாலை
7) குன்றக்குடி குமரன் பதிகம்
8) பாகனேரி புல்வநாயகி அம்மன் பதிகம்
9) அரண்மனை சிறுவயல் மும்முடி நாயர் பதிகம்.

சுவையான செய்திகள்

# திருச்சி

M. முத்தையா, திருச்சி-2.

1. நகரின் நடுவில் திருசிராமலை உள்ளது. இம்மலையில் சுவாமி, அம்மன் உச்சியில் பிள்ளையார் என்று மூன்று சிகரங்கள் (திரிசிரம்) உள்ளதால் திருசிராமலை எனப் பெயர் பெற்று நாளடைவில் திருச்சிராப்பள்ளி எனப் பெயர் பெற்றது.

2. திருச்சி நகரம் 1886-ல் நகராட்சியானது.

3. மெயின்கார்டுகேட் அருகேயுள்ள தெப்பக்குளம் விசுவநாத நாயக்கரால் தோற்றுவிக்கப்பட்டது.

4. உச்சிப் பிள்ளையார் கோவிலின் அடிவாரத்தில் மாணிக்க விநாயகர் கோவில் உள்ளது. படிகளில் பாதிப் படியைக் கடந்தவுடன் தாயுமானவர் சுவாமி கோவில் உள்ளது. இறைவன் லிங்க வடிவில் உள்ளார். அம்மை பெயர் மட்டு வார் குழலம்மை.

5. மலையின் உச்சியில் உச்சிப்பிள்ளையார் கோவிலுள்ளது. உச்சிப் பிள்ளையார் கோவிலுக்குச் செல்வதற்கு நபர் ஒன்றுக்கு 50 காசுகள் வசூலிக்கப்படுகின்றது. உச்சிப் பிள்ளை யார் கோவிலின் உயரம் 83 மீட்டர்.

6. தெப்பக்குளத்திற்குத் தெற்கே, நகரின் மத்தியில், நகர விடுதி அருகில் ராணி மங்கம்மாள் ஆட்சி செய்த அரண்மனை உள்ளது.

உறையூர்

பஞ்சவர்ணேசுவரர் கோவில் நாட்டுக்கோட்டை நகரத்தார் களால் திருப்பணி செய்யப்பட்டது. அம்மனின் கருவறையில் கோழியும், யானையும் என்ற படைப்புச் சிற்பம் உள்ளது. உறை யூருக்குக் கோழியூர் என்ற பெயரும் உண்டு.

நகரத்தார் ஊர்கள்

# விராச்சிலை

எழுதியவர்-அ. கருப்பையாத் தேவர்

மாவட்டம் : புதுக்கோட்டை மாவட்டம்.

இருப்பிடம் :

புதுக்கோட்டையிலிருந்து திருமயம் செல்லும் பாதையில் ''ஆறாங்கல்'' என்ற இடத்தில் பாதை பிரிகின்றது. இப்பாதையில் சென்றால் நச்சாந்துபட்டி என்ற ஊரை அடுத்து இவ்வூர் உள்ளது.

ஆலயங்கள் :

பாண்டிய மன்னரால் கட்டப்பட்ட சிவாலயம் உள்ளது. 1939-ல் பெரிய தம்பி செட்டியார் என்ற இராமஞ் செட்டியாரின் முயற்சியால் புதுப்பித்து குடமுழுக்கு நீராட்டு செய்யப் பெற்றது. இங்கு அடைக்கலங்காத்தம்பாள் கோவில் உள்ளது. விராச்சிலை சிறப்பெல்லாம் இந்த அம்பாள் கோவிலில்தான் உள்ளது. அடைக்கலங்காத்தம்மனுக்கு ''கானாடு காத்தவள்'' என்ற சிறப்புப் பெயரும் உண்டு.

மக்கள் தொகை :

நகரத்தார் புள்ளி 200, ஊரார் குடும்பம் 220.

கல்வி நிலையம் :

பெரி. மெ. வகைக் குடும்பத்தார் பள்ளி நடத்தி வருகின்றார்கள். இங்கே அஞ்சலகமும், மதுரை வங்கியும் உள்ளது.

ஊருணிகள் :

அரசத்தூரணி, இது குடிநீர் ஊரணியாகும். பொன்னமராவதி திருமயத்திலிருந்து இவ்வூருக்கு அடிக்கடி பேருந்து வசதி உண்டு.

நன்றி—''விராச்சிலை வரலாறு''
மணிவாசகர் நூலகம்.

---

வராகி அம்மன் (அடைக்கலங்காத்தம்மன்) வடிவானதால் வராகி சிலை விராச்சிலை ஆகியது என்றும், இவ்வூரிலுள்ள லிங்கம் சுயம்பு ஆனதால் வரையாச் சிலையே விராச்சிலை ஆனது என்று பலரும் கூறுகின்றனர்.

ஆன்மிகம்

# திருவரங்கம்

சுப. செந்தமிழன்.

திருச்சியிலிருந்து 5 கி.மீ. தொலைவிலுள்ளது. திருவானைக் காவிலிருந்து 2 கி. மீ. தொலைவிலுள்ளது. காவிரி நதிக்கும், கொள்ளிடத்திற்கும் இடையில் திருவரங்கம் உள்ளது.

## திருவரங்கநாதர் ஆலயம்

ஆலயத்தின் கருவறையில் ரெங்கநாத சுவாமி ஆதிசேடன் மீது வலது பக்கமாகச் சாய்ந்து கொண்டு காட்சி தருகின்றார். பெருமாளின் திருவுருவம் 6.4 மீட்டர் உள்ளது. கருவறை விமானம் பொன்னால் வேயப்பட்டுள்ளது. பெருமாளின் கருவறையைச் சுற்றி ஏழு சுற்றுகள் உள்ளது. இக்கோவிலில் 21 கோபுரங்கள் உள்ளது. வேணுகோபால் சந்நிதி சேசுராயர் மண்டபமும் சிற்பக் கலைக்கு எடுத்துக்காட்டாக உள்ளது. இம்மண்டபத்திலுள்ள எட்டுத் தூண்கள் ஒற்றைக் கல்லினால் ஆனது. சேசுராயர் மண்டபம் எதிரில் ஆயிரங்கால் மண்டபம் உள்ளது. இவ்வாலயத்தில் உள்ள கருட மண்டபம் வியக்கத்தக்க படைப்பாகும். கருடாழ்வார் செப்புச்சிலை மிக உயரமானது. இம்மண்டபத்தில் 212 தூண்கள் உள்ளது. இக்கோவில் பற்றி சங்க இலக்கியமாகிய சிலப்பதிகாரத்திலும், நாலாயித்திவ்யப்பிரபந்தங்களிலும் கூறப்படுகின்றது.

## கல்லணை

திருச்சியிலிருந்து 14 கி.மீ. தொலைவிலுள்ளது. காவிரியும், கொள்ளிடமும் கூடுமிடத்திலுள்ளது. இவ்வணையின் தொடக்கப் பகுதி சோழ அரசன் கரிகாலனால் கட்டப்பட்டது.

## பெண் விநாயகர்

கன்னியாகுமரி மாவட்டம் சுசீந்திரம் கோவிலில் பெண் விநாயகர் உள்ளார். இங்கே உள்ள பெண் விநாயகருக்கு விநாயகி என்று பெயராகும்.

# நமது செய்திகள்

## நேமம் கோவில் குடமுழுக்கு விழா

நகரக் கோவில்களில் ஒன்றான நேமம் கோவிலின் குடமுழுக்கு விழா தை மாதம் 21-ம் தேதி (3—2—91) ஞாயிற்றுக்கிழமை சிறப்பாக நடைபெறவுள்ளது.

---

## கூட்டுத் திருமணம்

திருச்சி நகரத்தார் சங்கம் பிள்ளையார்பட்டியில் தை மாதம் 21-ம் தேதியன்று கூட்டுத் திருமணம் நடைபெறுமென்று முன்பு அறிவித்திருந்தது. தை மாதம் 21-ம் தேதியன்று நேமம் கோவில் குடமுழுக்கு விழா நடைபெறுவதால் தை மாதம் 22-ம் தேதியன்று (4–2–91) திங்கட்கிழமை கூட்டுத் திருமணம் நடைபெறுமென்று அறிவிக்கப்பட்டுள்ளது. மார்கழி மாதம் 20-ம் தேதிக்குள் வரும் விண்ணப்பங்கள் ஏற்றுக் கொள்ளப்படும்.

---

## பிள்ளையார் நோன்பு

பிள்ளையார் நோன்பு மார்கழி மாதம் 8-ம் தேதி (23-12-90) ஞாயிறு அன்று மாலை 6 மணிக்குத் திருச்சி நகரத்தார் சங்கக் கட்டிடத்தில் சிறப்பாக நடைபெறும்.

---

## இயற்பகை நாயனார் திருவிழா

தஞ்சை மாவட்டம் காவிரிப்பூம்பட்டினத்தில் சாயா வனத்தில் அமைந்துள்ள திருச்சாய்க்காடுடையார் திருக்கோயிலில் இயற்பகை நாயனார் திருவிழா 4–1–91 முதல் 8–1–91 வரை ஐந்து நாட்கள் சிறப்பாக நடைபெறவுள்ளது.

---

## ''பழம் நீ'' பாதயாத்திரைக்குழு

லெ. மு. மு. முத்துமாணிக்கம் அவர்களால் ஆண்டு தோறும் சிறப்பாக நடத்தப்படும் ''பழம் நீ'' பாதயாத்திரைக்குழுவின் கூட்டு வழிபாடு மதுரை நகர விடுதியில் 5–1–91 சனிக்கிழமை மாலை 5 மணி அளவில் சிறப்பாக நடைபெறும். 6–1–91 ஞாயிற்றுக்கிழமை வடக்காடி வீதியிலுள்ள திருவள்ளுவர் கழகத்தில் கவியரங்கம் நடைபெறும்.

---

## சபரிமலை

சபரிமலையில் விரைவில் நகர விடுதி அமைய உள்ளது. இந்த நகர விடுதி அமைக்கும் பணியில் தேவகோட்டை திரு. தி. சு. பழ. ப. சித. வள்ளியப்ப செட்டியார், பொற்கிழிக் கவிஞர் அரு. சோம சுந்தரனார் ஆகியோர் தீவிர முயற்சியில் ஈடுபட்டுள்ளனர்.

# வாசகர் எண்ணங்கள்

சென்னை நகர விடுதிகள் என்ற தலைப்பில் நவம்பர் இதழில் தாங்கள் எழுதியுள்ள தலையங்கம் வரவேற்கத்தக்கது. சிந்திக்கத் தக்கது.

KR. சிந்தாமணி,
சென்னை-5.

---

பட்டமங்கலம் பற்றி நிறையச் செய்திகள் தந்துள்ளீர்கள்.

M. முத்தையா,
திருச்சி-2.

---

உருதிக்கோட்டை வட்டகை நகரத்தார்களை நாட்டுக் கோட்டை நகரத்தார்கள் என நினைத்து நீங்கள் எழுதியிருப்பதை நான் ஏற்கமாட்டேன்.

RM. K. சுப்பிரமணியன்,
தி. நகர், சென்னை-17.

---

அம்பத்தூர் நகரத்தார் சங்கம் பற்றி விரிவாக எழுதியுள்ளீர்கள். நான் அம்பத்தூரில் இருந்தபோதும் எனக்கு அம்பத்தூர் நகரத்தார் சங்கம் பற்றி அவ்வளவு விரிவாகத் தெரியாது. தங்கள் நவம்பர் இதழ் மூலம் தெரிந்து கொண்டேன்.

K. ராமநாதன்,
அம்பத்தூர், சென்னை-53.

---

உங்கள் இதழில் பக்கம் குறைவு. ஆனால் செய்திகள் நிறைவாக உள்ளன.

KN. கணேசன்,
புதுக்கோட்டை.

---

## பெரியோர்கள் வாழ்த்தும் பதினாறு பேறுகள்

1. புகழ் 2. கல்வி 3. வலிமை 4. வெற்றி 5. நன்மக்கள் 6. பொன் 7. நெல் 8. நல்வினை 9. நுகர்ச்சி 10. அறிவு 11. அழகு 12. பொறுமை 13. இளமை 14. துணிவு 15. நோயின்மை 16. வாழ்நாள்.



# மருத்துவம்

**உடல் நலம்**

சிலருக்கு வயிறு எப்போதும் இரைச்சலுடன் இருக்கும். இது 'வயிற்றுப் பொருமல்' எனப்படும். இதற்குக் காரணம் பெருங் குடலில் வாய்வு சேர்வதுதான் ஆகும். வயிறு உப்புசம் அடையும். இது அடிக்கடி வந்தால் குடலின் வலிமை கெட்டுவிடும். இதைத் தடுக்க சில எளிய வழிமுறைகள்.

1. உண்பதற்குத் தகாத பொருட்களைச் சாப்பிடக்கூடாது.
2. காய்கறிகளை நன்கு மென்று விழுங்க வேண்டும்.
3. மது, பொடி, புகை ஆகியவற்றை நீக்க வேண்டும்,
4. வெங்காயம், பூண்டு, சீரகம், சுக்கு, இஞ்சி ஆகியவற்றை உணவில் போதுமான அளவில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

—களத்தூர் வைத்தியர் டாக்டர் ராமனுதன்,
சிவகங்கை.



பட்டர்ஃபிளை குரூப்பின் கீழ் ஒன்பது நிறுவனங்கள் உள்ளன. இவற்றில் ஒன்றான கங்காதரம் அப்ளையன்சஸ் பொது மக்களுக்காக ஷேர்களை வெளியிட்டுள்ளது.

1989-ல் கங்காதரம் அப்ளையன்சஸ் பிரஷர் ஃபான், ஸ்டெயின்லஸ் ஸ்டீல் பிரஷர் குக்கர் தயாரிப்பதற்காகத் தொடங்கப்பட்டது. சென்னையருகே இத்தொழிற்சாலை உள்ளது. பட்டர்ஃபிளை பிளாஸ்க்குகள் தற்பொழுது மிகவும் பிரபலமாகி வருகிறது.

26–10–89 அன்று உற்பத்தியைத் தொடங்கிய இந்நிறுவனம் 8 மாதத்திற்குள் 745 லட்சம் ரூபாய்க்கு வியாபாரம் செய்தது. தேய்மானம் போக நிகர லாபம் 102 லட்சம் ரூபாய்.

கங்காதரம் அப்ளையன்சஸ் லிமிடெட்டின் முதலீடு 108 லட்சம் ரூபாய். இதில் 78 லட்சம் ரூபாய்க்கான ஷேர்கள் பொது மக்களிடம் உள்ளது. தற்போதைய ஏர்னிங் பர் ஷேர் ரூபாய் 8-50 ஆகும். விரைவிலேயே இந்த ஷேர் விலை ரூ. 125 வரை போகும். விரைவில் முதல் டிவிடெண்டாக 20 முதல் 25 சதவீதம் வரை எதிர்பார்க்கலாம். தற்பொழுது 75 ரூபாயாக இருக்கும் இந்த ஷேர் நிச்சயமாக மூன்று மாதங்களில் 125 ரூபாயை எட்டும்.

நன்றி–நெல்லை ஹரி,



உ

ஓம் முருகா

# ஆருடம்

P. சங்கர், 115, சின்னக் கடைத் தெரு, தெற்கு வாசல், மதுரை,

## 20-12-90 முதல் 19-1-91 வரை

### மேஷம்

தீர்த்த யாத்திரை, வீடு, நிலம் போன்றவை மூலம் எதிர் பார்த்த உதவி கிடைத்தல், பிரயாணத்தின் மூலம் அன்னியர் உதவி, வெளிநாடு செல்லுதல் போன்றவை ஏற்படும். சுப விரைய சிலவுகள் ஏற்படும்.

### ரிஷபம்

திடீர் பகை, எதிரியினால் தொல்லைகள், குடும்பத்தில் அமைதி குறைவு, எதிலும் மிகவும் கவனம் தேவை. கணவன் மனைவி பிரிவினை போன்றவை ஏற்படலாம். உடல் நலத்தில் கவனம் தேவை. பிரயாணங்களைத் தவிர்க்கவும்.

### மிதுனம்

கூட்டுத் தொழில் பார்ப்பவர்களுக்கு மாற்றங்கள் ஏற்படலாம். விவாகம், சுப காரியம் போன்ற நிகழ்ச்சிகள் தடையின் பேரில் மாதப் பிற்பகுதியில் நலம் உண்டாகும். எதிர்பாராத திடீர் பொருள் சேர்க்கை ஏற்படலாம். பிரயாணம் மூலம் ஆதாயம் ஏற்படும். பூர்வீகச் சொத்துக்கள் பிரச்சனையின் மூலம் மனக் கஷ்டம் ஏற்படும்.

### கடகம்

பொருளாதார நெருக்கடி, யாரிடமும் ஜாமின், கொடுக்கல், வாங்கலில் கவனம் தேவை. சிலருக்கு ஆபரேஷன் போன்றவை ஏற்படலாம். குடும்பத்தில் மனதிற்குப் பிடிக்காத சங்கதிகள் நடக்கும். பிரயாணங்களைத் தவிர்க்கவும். மாதப் பிற்பகுதியில் நலம் உண்டாகும்.

### சிம்மம்

குழந்தைகள் சம்மந்தப்பட்ட சுப நிகழ்ச்சிகள், தொழில் பார்ப்பவர்களுக்கு புதிய கூட்டு முயற்சியினால் ஆதாயம், எதிலும் காரிய ஜெயம், வீடு, நிலம் வாங்கும் யோகம் உள்ளது,

**கன்னி**

உத்தியோகம் பார்ப்பவர்களுக்கு மேலோரின் பகை ஏற்படும். திடீர் இடமாற்றம், உடல் நிலை பாதித்தல், புதிய பிரச்சனைகள் தோன்றி வழக்குகள் ஏற்படலாம். எதிலும் கவனம் தேவை.

**துலாம்**

குடும்பத்தில் அமைதி குறைவு, எதிலும் காரியத் தடை, உடல் நிலை பாதித்தல், தொழில் கடன் ஏற்படுதல் போன்றவற்றில் நிதானம் தேவை. மாத இறுதியில் மிகவும் எச்சரிக்கையாய் இருத்தல் நல்லது.

**விருச்சிகம்**

எதிர்பார்த்த உதவி கிடைத்தல், திருமணம் போன்ற சுப செய்தி, தீர்த்த யாத்திரை, தாயார் உடல் நிலை பாதித்தல் போன்றவை ஏற்படலாம். சிலருக்குக் கண் நரம்பு சம்மந்தப்பட்ட ஆபரேஷன் ஏற்படும்.

**தனுசு**

எதிர்பார்த்த காரியம் நடக்கும். பிரயாணங்களின் மூலம் ஆதாயம், உறவினர் தொல்லைகள், எதிர்பாராத வகையில் கூட்டுத் தொழிலில் ஆதாயம், பூமி சம்மந்தப்பட்ட பிரச்சனையின் மூலம் ஆதாயம், பெரியோர்களின் நட்பு' சந்திப்பு எற்படும்.

**மகரம்**

7½ சனியின் பாதிப்பு எதிலும் குழப்பம் ஏற்படலாம். வியாபாரிகள் மிகவும் கவனத்துடன் செயல்படவும். அரசாங்கச் சிக்கல் போன்றவை ஏற்படும். சிலருக்கு வீண் பகை உண்டாகலாம். புதிய முயற்சிகளைத் தவிர்க்கவும். காரியத்தடை ஏற்படும்.

**கும்பம்**

நண்பர்கள், உறவினர்கள் மூலம் ஆதாயம், எதிலும் காரிய ஜெயம், பொருள் சேர்க்கை, ஏஜென்சி, வெளிநாட்டுத் தொடர்பு உள்ள எந்தக் காரியமும் ஜெயமாகும். சிலருக்கு வாகன யோகம் உண்டு. பூர்விகச் சொத்துக்கள் மூலம் ஆதாயம்.

**மீனம்**

உத்தியோகம் பார்ப்பவர்களுக்குக் கடன் தொல்லைகள், சிலருக்குப் புதிய தொழில் தொடக்கம், இடப் பெயர்ச்சி போன்றவை ஏற்படும். உடல் நிலையில் கவனம் தேவை. அன்னியர் மூலம் எதிர்பாராத உதவி கிடைக்கும். சூரிய வழிபாடு நலம் தரும்.

# திருவெம்பாவை

ஆதியும் அந்தமும் இல்லா அருட்பெருஞ்
சோதியை யாம்பட்க் கேட்டேயும் வாள்தடங்கண்
மாதே! வளருதியோ! வன்செவியோ நின்செவிதான்?
மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே, விம்மிவிம்மி, மெய்மறந்து
போதார் அமளியின் மேல்நின்றும் புரண்டுஇங்ஙன்
ஏதேனும் ஆகாள், கிடந்தாள்; என்ன!என்ன!
ஈதே எந்தோழி பரிசேலோர் எம்பாவாய்.

—மாணிக்கவாசகர்.

# திருப்பாவை

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளால்;
நீராடப் போதுவீர் போதுமினோ! நேரிழையீர்!
சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள்!
கூர்வேல் கொடுந்தொழிலன் நந்தகோபன் குமரன்
ஏரார்ந்த கன்னியசோதை இளஞ்சிங்கம்
கார்மேனிச் செங்கண்கதிர் மதியம்போல் முகத்தான்
நாராயணனே, நமக்கே பறைதருவான்,
பாரோர் புகழப் படிந்தேலோ ரெம்பாவாய்.

—ஆண்டாள்.



# வழக்கறிஞர் S. மெய்யப்பன் B.A., B.L., அவர்களுடன் பேட்டி

பேட்டி கண்டவர்கள் :

சுப. செந்தமிழன்
ராம. அருணாசலம்

வழக்கறிஞர் மெய்யப்பன் அவர்களை அவரது இல்லத்தில் பேட்டி கண்டோம்.

எளிமையும் பணிவும் பொழிவுதர அன்புடன் வரவேற்றார். சென்ற இரண்டு ஆண்டுகளாகப் பேட்டி காணும் முயற்சியில் தடங்கல் ஏற்பட்டதைச் சொன்னோம். புன்சிரிப்பைப் பதிலாகத் தந்து நேரம் வரும்போது அமையும் என்றார். உழைப்பினால் உயர்ந்த பண்பாளர்களில் ஒருவராகத் திகழும் மெய்யப்பன் அவர்கள் நமது இனத்திற்குப் பெருமை சேர்ப்பவர்.

கேள்வி : உங்களின் வாழ்க்கைக் குறிப்பு பற்றி அறிய விரும்புகின்றேன்?

பதில் : 16-2-1925-ல் நகரத்தார் சமூகத்தில் இளையாற்றங்குடி கோவில் பட்டணசாமி பிரிவைச் சார்ந்த புதுவயல் வீர. சா. சாத்தப்ப செட்டியார் எனது தந்தையின் பெயர். உமையாள் ஆச்சி எனது தாயாரின் பெயர். மனைவியின் பெயர் முத்தழகம்மை ஆச்சி. நான்கு ஆண் மக்களும் நான்கு பெண் மக்களும் மக்கள் செல்வங்கள். பிறந்த பொழுது சாதாரணக் குடும்பம். என் பெற்றோர் குலத்தொழிலுக்கு முற்றுப்புள்ளி வைத்து என்னையும் என் சகோதரர்கள் காலஞ்சென்ற பள்ளத்தூருக்கு சுவீகாரம் சென்ற அ. வெ. அருணாசலம்

செட்டியார், பெயரோடும் புகழோடும் விளங்குகின்ற சாத்தப்பா சுப்பிரமணியன் முதலியோரையும் சிதம்பரத்திற்குக் கூட்டிச் சென்று படிக்க வைத்து எழ்மையையும் மகிழ்ச்சியையும் குடும்பத்தில் ஒற்றுமை தவழ வழி வகைகளும் வீட்டுப் பாடமாகச் சொல்லித் தந்தார்கள். சிதம்பரத்திலும், புதுக்கோட்டையிலும் அண்ணாமலை நகரிலும், சென்னை சட்டக் கல்லூரி யிலும் தொழிற் படிப்புப் பயின்று தேவகோட்டையில் வழக்கறிஞர் தொழிலை 1950-ம் ஆண்டு தொடங்கி னேன். ஆண்டவன் அருளும், பெற்றோர் ஆசியும், சகோதரர்கள், சகோதரி அமிர்தவல்லி ஆச்சி அவர் களுடைய நல்வாழ்த்துக்களினாலும் தொழிலில் படிப் படியாக முன்னேறி 1954-ல் தேவகோட்டை துணை அரசு வழக்கறிஞராகவும், வழக்கறிஞர் தொழிலையும் கவனித்து வந்தேன். 1967-ம் ஆண்டு காரைக்குடி அமரர் சா. கணேசன், தமிழ்க் கடல் ராய. சொ. அவர் களுடைய முழு ஆசி பெற்று அரசியல் வாழ்வைத் தொடங்கி முதன் முதலாகத் தி. மு. க. அரசு அமைத்த காலத்தில் காரைக்குடி சட்ட மன்ற உறுப்பினராகப் பணியாற்றினேன். தந்தையார் எனது நேர்மையை அடிக்கடி மனத்திலேயே புகழ்ந்தார்கள். 1971-ல் தந்தையார் மறைவிற்குப்பின் அந்த இடத்தைச் சகோ தரர்கள் நிரப்பினார்கள். தாய்ப் பாசத்தைச் சகோ தரியும், அண்ணிமார்களும் அள்ளித் தந்தார்கள். குடும்ப ஒற்றுமைக்கு மனைவி ஒத்துழைப்புக் கொடுத்து வருகிறாள். நான் என் பெற்றோர்களிடம் நடந்து கொண்ட பண்பினை என் மக்கள் என்னிடம் காட்டி வருகின்றனர். மருமகன்களும், இதுவரை இரண்டு மருமகள்களும் குடும்ப ஒற்றுமையின் விழுதுகளாக இருக்கின்றனர். இனி வர் இருக்கும் மருமகள்களும் அப்படி வரவேண்டுமென்ற துதியை முக்கியமாக என் குலதெய்வத்திடம் தினமும் பிரார்த்திக்கிறேன். பொது வாக மனநிம்மதியாக 1974-ம் ஆண்டு முதல் குற்ற இயல் அரசு வழக்கறிஞராகவும், பின்பு வழக்கறிஞராக வும் தொழிலைப் புதுக்கோட்டையிலும் செய்து வருகின் றேன். என்னுடைய உடன் பிறவாத தம்பிகள் பலர் என்னிடம் இளம் வழக்கறிஞர்களாகப் பணியாற்றியவர் கள் என்பேரில் அக்கரை காட்டி வருவதுடன் அனைவரும் புகழோடும் வாழ்கிறார்கள். ஒரு சிலர் நீதிபதியாக இருக் கிறார்கள். நான் நகரத்தார் குலத்தில் பிறந்தவன் என்பதை மனக்கண்முன் நிறுத்தி நாணயமும், நேர்மை யும், சொல்லுறுதியும், உண்மையும், தர்மமும் இருக்

கும் என்ற நம்பிக்கையில் என்னிடம் பல இனத்தவர்கள் கட்சிக்காரர்களாக அமைந்ததாகவே நான் திண்ணமாக நம்புகிறேன். இந்த நம்பிக்கையை வளர்க்க வேண்டும் என்ற ஒரே ஆசைதான் என் வாழ்நாள் வரை இருக்க வேண்டுமென மணமாகாத விநாயகரை வழிபடுகிறேன்.

வாழ்க குலப் பெருமை.
வளர்க குல ஒற்றுமை.
ஓங்குக நகரத்தார் குடும்ப அடிப்படை ஒற்றுமை.



# துணுக்குகள்

L. சீனிவாசன், சென்னை-5.

1. முதல் இந்திய ரூபாய் 1927-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 29-ம் தேதி கல்கத்தாவில் அச்சிடப்பட்டது.

2, நமது நாட்டில் கிடைக்கும் உப்பின் நிறம் வெள்ளை. பிரிட்டனில் கிடைக்கும் உப்பின் நிறம் பொன்னிறமாகவும், சற்று சிகப்பு நிறமாகவும் இருக்கும். அங்கேரியில் கிடைக்கும் உப்பின் நிறம் நீலரத்தினம்.

3. இலங்கையிலுள்ள ஒவ்வொரு கல்லூரிக்கும் ஒரு தனிக் கொடி உண்டு.

4. உலகிலேயே மிக அதிகமான கிளைகளைக் கொண்ட வங்கி ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா. இந்தியா முழுமையாக உள்ள அதன் கிளைகளின் எண்ணிக்கை 11,171.

5. இந்தியாவில் முதலில் பின்னணி இசை சேர்க்கப்பட்ட படம் பாக்கிய சக்கரா என்ற வங்காள மொழிப் படம் ஆண்டு 1934



**காளையார் கோயில்**

காளையார் கோயிலில் வேதாந்த மடத்தை நிறுவி சமாதி கொண்டு அருளிய பெருமைமிக்க சமீந்தார் சுவாமிகள் என்ற அருணாசல தேசிக சுவாமிகளின் 58-வது குருபூசை விழா பிரமோதூத வருடம் மார்கழி மாதம் 15-ம் தேதி (30-12-90) ஞாயிற்றுக்கிழமை மிருக சீரிஷ நட்சத்திரத்தில் சிறப்பாக நடைபெறவுள்ளது.



# காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர மேலாண்மைக் கழகத்தின் நற்பணிகள்.

பேராசிரியர். இராம. சிவசுப்பிரமணியன், தமிழ்த்துறை, ஸ்ரீ சேவுகன்-அண்ணுமலை கல்லூரி, தேவகோட்டை.

நகரத்தார்கள் காசி முதல் கன்னியாகுமரி ஈருக நம் சமூகத்தினர் யாத்திரைக் காலங்களில் தங்குவதற்கென ஆங்காங்கு நகர விடுதிகளை அமைத்திருப்பது உலகறிந்த செய்தி. அந்நகரச் சத்திரங்களில் முதன்மை சான்றது காசி நாட்டுக்கோட்டை நகரச்சத்திரம். அச்சத்திரத்தினை மையமாகக் கொண்டு நிறுவப் பெற்றுள்ள 'காசி நாட்டுக்கோட்டை நகரச் சத்திர மேலாண்மைக் கழகம்' சென்ற 1986 முதல் நாளிது தேதி வரை ஆற்றி வந்திருக்கின்ற அருப்பணிகளை அறிந்தோர் பாராட்டாமல் இருக்கமாட்டார்கள்.

''இதனை இதனல் இவன்முடிக்கும் என்ருய்ந்து
அதனை அவன்கண் விடல்''

என்பது செயல்பாட்டின் சிறப்பை விளக்கும் அருமைக் குறளாகும். அந்நெறியில் நம் நகரத்தார் பெருமக்கள் தக்காரிடம் தலைமைப் பொறுப்பை ஒப்பித்துச் செயல்பாடுகளைத் தீவிரம் ஆக்குவதில் வல்லவர்கள், அவ்வகையில், சென்றமுறை இக்கழகத்தின் தலைவராக இருந்தவர்கள் எங்கள் கல்லூரி நிறுவனர், செயல் வல்லுநர் உயர்திரு, உ. ராம. மெ. சுப. சேவு. அண. அண்ணுமலை செட்டியார் அவர்கள் ஆவார்கள். அவர்கட்கு உறுதுணையாக இருந்த செயலர் உயர்திரு. சுப. சண்முகம் செட்டியார் அவர்களும் நமது போற்றுதலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியவர்கள் ஆவார்கள்.

அப்பெருமக்கள் தமது அரிய முயற்சியால் காசி நகரச் சத்திர மேலாண்மைக் கழகத்தின் நிதியைப் பரவலாகப் பயன்படுத்தி நமக்குச் செய்திருக்கின்ற நன்மைகள் பலப்பலவாகும்.

நம் தமிழகத் தலைநகராம் சென்னையில் பவளக்காரத் தெரு ரெங்கோன் நகரவிடுதியில் அவர்கள் பெருக்கியிருக்கின்ற வசதிகள் பற்பலவாகும், இதுதே போலக் காசியிலும் பழுதுகளையெல்லாம் சரிபார்த்து வசதிகளைப் பெருக்கி இருக்கின்றனர். இன்னும் பிரயாகை, அயோத்தி, கயா முதலிய புண்ணியத் தலங்களில் பழுதுற்றுக் கிடந்த நம் நகர விடுதிகளையெல்லாம் புதுப்பொலிவு பெற்று விளங்கச் செய்திருப்பது பாராட்டுதற்குரியது. ஏறத்தாழ 30 திருமணங்கள் நம் மேலாண்மைக் கழகத்தின் நிதி உதவியால்

இவர்கள் நிர்வாகத்தில் நிகழ்ந்திருக்கின்றன. பெண் வீட்டார் ஒவ்வொருவருக்கும் ரூபாய் 3500/- விதம் நிதி உதவி பெற்றுத் தம் பெண்ணுக்கு வாழ்வளித்துள்ள செய்தி மிகுந்த மகிழ்ச்சிக்கு உரியதாகும். இன்னும் தொழில் நுட்பக் கல்விக்கும், தொழிற் கல்விக்கும் உயர் கல்விக்கும் நிதி உதவி ஊக்கம் அளிக்கும் நமது சமூகத்தை போற்றத்தான் வேண்டும்.

இவையெல்லாம் உலகியலில் நம் உயர்வுக்கு நம் கழகம் ஆற்றிய அரிய சாதனைகள், இவை போக ஆன்மீக வழியில் நம் இனம் உய்ய, காசி விடுதியிலுள்ள நகரேசுவரர் கோவிலிலும், காசி நகரிலுள்ள விசுவேசுவரர் கோவிலிலும் நமது கட்டளைகள் சீரும் சிறப்போடும் நடைபெற்று வருகின்றன.

'தர்மம் தலைகாக்கும்' என்பது நாம் அறிந்த பழமொழி. அத்தர்மத்தைத் தமது அரிய பணிகளால் போற்றிப் புரந்த நம் அருமை அண்ணல் சேவு. அண்ணாமலையார் அரவணைப்பில் நம் கழகத்தின் நிதிநிலையும் முன்பிருந்ததற்குமேல் பல லட்சமாகப் பெருகி இருக்கிறது என்பதையும் நாம் உள்ளன்போடு பாராட்டி மகிழ்கிறோம். நமது சமூக வளர்ச்சிக்கு அரிய பணிகள் ஆற்ற காசி விசுவேசர் விசாலாட்சி அருள் புரிவார்களாக.

---

சிந்தனையின் தொண்ணூறு சதவிகித ஆற்றல் சாதாரண மனிதனால் வீணாக்கப்படுகின்றது. எனவே தொடர்ந்து அவன் பெரிய தவறுகளைச் செய்து கொண்டே இருக்கிறான். சரியான பயிற்சியைப் பெற்ற மனிதனோ மனமோ ஒருபோதும் தவறு செய்வதில்லை.

—விவேகானந்தர்.

---



# மூளைக்கு வேலை

1. ஒரு மாதத்தின் பத்தாவது நாள் திங்கட்கிழமைக்கு முந்தின நாளாக வருகிறது. அம்மாதத்தின் இரண்டாம் நாள் என்ன கிழமை வரும்?

2. ஒன்பது பையன்கள் ஒன்பது நிமிடத்தில் ஒன்பது பக்கம் எழுதுகிறார்கள். ஒரு பையன் எவ்வளவு பக்கம் எழுதுவான்?

3. இரண்டு மணி நேரத்தில் கடிகாரத்தின் நிமிட முள் எத்தனை டிகிரி சுற்றி வரும்?

1. சனிக்கிழமை 2. ஒன்பது நிமிடம் 3. 720 டிகிரி.

விடைகள் :

—தெ. மு. உத்தமன், மதுரை.



## இரட்டைச் சொற்கள்

ஆண்டான் — அடிமை
சூது — வாது
துணி — மணி
நில — புலம்
குற்றம் — குறை
வம்பு — தும்பு
சொல்லுப் — பில்லு
பட்டம் — பதவி
எண் - எழுத்து
சட்ட — திட்டம்
சின்னஞ் - சிறுசு
பேய் - பிசாசு
தான - தருமம்

மந்திர — தந்திரம்
சொந்த — பந்தம்
சாக்குப் — போக்கு
மூட்டை — முடிச்சு
கோப — தாபம்
வாட்ட — சாட்டம்
இன்ப — துன்பம்
நாள் — கிழமை
சொத்துப் — பத்து
கதை - கச்சேரி
கொடுக்கல் - வாங்கல்
புல் - பூண்டு
பாவ - புண்ணியம்

—எவர்பிரைட் நாச்சியப்பர்.

# சுவீகாரம்



மு. நாராயணன் செட்டியார்,
பாகனேரி.

செட்டிநாட்டில் சுவீகாரம் கூட்டுவதென்பது நீண்டகாலமாக நடந்து வரும் நிகழ்ச்சியாகும். திருமணமாகி நீண்ட நாட்கள் வாழ்ந்த பின்னரும் ஆண் குழந்தை பெற இயலாதவர்கள் சுவீகாரம் என்ற பெயரில் வேறிடத்தில் பிறந்த ஒருவனை சுவீகாரம் செய்து கொள்கிறார்கள். மற்ற சமூகங்களில் அண்ணன் மகன், தம்பி மகன் என்ற நெருங்கிய உறவு வகையில் உள்ள ஒருவனைத் தனக் கென்று எழுதி வைத்துக் கொள்கிறார்கள். நகரத்தார் சமூகத்தில் உறவுமுறை இல்லாமலும், முன் தொடர்பு இல்லாத நிலையிலும் உள்ள ஒருவனைச் சுவீகாரம் செய்து கொள்கிறார்கள். தனக்குப் பிதிர்க் கடன்கள் செய்யவும், தனக்கு வாரிசு வேண்டுமென்பதாலும் சொத்துக்களை ஆட்சி செய்யவும், பெண் மக்கள் இருப்பின் அவர் கட்குத் தொடர்ந்து சீர் முறைகள் செய்யவும் எனப்பல நல்ல எதிர்பார்ப்புகளுடன் தான் இத்தகைய சுவீகாரங்கள் கூட்டுகிறார் கள். ஆனால் கூட்டிய பின்னர் சில இடங்களில் சுவீகாரம் வந்த வர்கள் கூட்டிக் கொண்ட தாய், தந்தை, சகோதரிகள், மற்ற உறவினர்கள் ஆகியோருடன் நல்ல உறவு கொள்ளாமல் தான் தோன்றித்தனமாக நடந்து, கூட்டிக் கொண்ட பெற்றோர்கட்குப் பெருந்துன்பம் தருபவர்களாக அமைந்து விடுகிறார்கள். பல இடங்களில் சுவீகாரம் என்ற பெயரால் புதிய பெற்றோர்களுடன் வாழ வந்தவனை மிகவும் கொடுமைப்படுத்தி அவனை வேற்று மனிதனாகவே கருதுகிறார்கள். நாமே விரும்பி வேண்டுமென்றே இந்தக் காரியத்தைச் செய்து நாம் துன்பப்படுவது ஒருபுறம். வாழ வந்தவனைத் துன்புறுத்துவது மறுபுறம். அப்படிச் சுவீகாரம் வந்த பையனை நாம் சொந்தப் பிள்ளைபோல் கருதும் மனப் பான்மை, கூட்டிக் கொள்பவர்களுக்கு இருக்க வேண்டும். அப்படிப் பக்குவமில்லாதவர்கள் சுவீகாரம் கூட்டாமலேயே இருந்து விடுவது நல்லது. ஒரு பெண் மகளோ, அல்லது அதிகமான பெண் மக்களோ இருக்கும் இடத்தில் ஒருவனைச் சுவீகாரம் கூட்டி அவனுக்கு

எதுவும் கொடுக்காமல் எல்லாவற்றையும் பெண்களுக்கே கொடுப்பது பெரும்பாலும் நடைமுறையில் இருந்து வருவதை நாம் பார்க்கிறோம். இந்த நிலை இருக்குமானால் சுவீகாரம் கூட்டவே அவசியமில்லை. கூட்டி வந்து அவனையும் வைத்துக் கொண்டு படிக்கும் வயதிலிருந்தால் படிக்கவும் வைக்காமல், எங்காவது வேலைக்குப்போ என்று வெளியில் அனுப்பி விடுகிறார்கள். ஊராருக்காக சுவீகாரம் கூட்டுகிறார்களே தவிர நமக்காக, நம் குடும்பத்திற்காக என்ற நோக்கத்தில் செய்வது மிகவும் குறைவாகவே இருக்கிறது. பிறந்த குடும்பத்தில் 4, 5 சகோதர, சகோதரிகளுடன் பிறந்த ஒருவன்தான் பெரும்பாலும் சுவீகாரமே வருகின்றான். அப்படி உள்ள இடங்களைத் தேடிப் பிடித்து, சாதகம் பார்த்துக் கூட்டி வந்த பின்னர் அவனையும் நம் சொந்தக் குழந்தை போல் பாவிக்கும் மனப்பான்மை வளர வேண்டும். திருமண வயதில் சுவீகாரம் கூட்டி 4, 6 மாதங்களில் திருமணத்தையும் செய்கிறார்கள். அதன் பிறகு இன்னும் பல கஷ்டங்களை சுவீகாரம் வந்தவன் அனுபவிக்க வேண்டியதிருக்கிறது. இதற்கெல்லாம் தாக்குப் பிடிப்பவர்கள்தான் பிரகாசிக்க முடிகிறது. சுவீகாரம் வந்தவன் நாம் பிறந்த வீட்டிலேயே இருந்திருந்தால் இதைவிட நன்றாக வாழ்ந்திருக்கலாமே என்று கருதுமாறு பிள்ளை கூட்டி வந்த பெற்றோர்கள் நடந்து கொள்வது கூடாது. அவனையும் வாழவைத்து நாமும் வாழ வேண்டும். சுவீகாரம் கூட்ட வேண்டும் என்று பல வருடங்களாக அலைந்து பல இடங்களில் தேடி ஒருவனைக் கூட்டி வந்து-அப்படிக் கூட்டியபின் அவனும் கஷ்டப்பட்டுக் கூட்டி வந்தவர்களும் கஷ்டப்படும் நிலை இருக்குமானால் இந்தக் காரியத்தைச் செய்யாமலே இருந்திருக்கலாம்-அல்லவா? நன்கு யோசித்துப் பார்க்க வேண்டுகிறேன். எல்லோரிடமும் குறைகள் இருக்கலாம். குறைகளையே பெரிது படுத்திக் கொண்டு போனால் வாழ்க்கையே குறையுடையதாகத்தான் அமையும். எனவே இனிமேலாவது செட்டிநாட்டில் பிள்ளை கூட்ட எண்ணுபவர்கள் நன்கு யோசித்துச் செய்ய வேண்டியது தலையாய கடமை ஆகும். கூட்டிய பின் வருந்த வேண்டாம். வந்தவன் வாழ வழி வகுத்துத் தரவேண்டியது பிள்ளை கூட்டிக் கொண்ட பெற்றோர்களின் கடமையாகும். சுவீகாரம் வந்த பையன்களும் பொறுப்புணர்வோடு நடந்து கொண்டு, வந்த இடத்திற்குப் பெருமை தேடித் தரவேண்டும். கூட்டிக் கொண்ட பெற்றோர்களை மதித்து நடக்க வேண்டும். அப்படி நடந்தால் சுவீகாரம் வந்தவனுக்கும் பெருமை. கூட்டிக் கொண்ட பெற்றோர்க்கும் பெருமை. □

# அறிவுக்கு விருந்து

1) தந்தையிடமிருந்து பெறுவதை உன்னுடையதாக்கிக் கொள். நீயே அதைச் சம்பாதிக்க வேண்டுமென்று உறுதி செய்து கொள்.

—கதே.

2) சோம்பேறி இரண்டு முட்களும் இல்லாத கடிகாரம். அது நின்றாலும் ஓடினாலும் பயனில்லை.

—கௌப்பர்.

3) மனிதனுடைய சிறந்த நண்பர்கள் அவனுடைய பத்து விரல்களே.

—காலியர்.

4) செயல் விதைத்தால் பழக்கம் விளையும்.
பழக்கம் விதைத்தால் குணம் விளையும்.
குணம் விதைத்தால் நன்மை விளையும்.

—போர்டுமன்.

5) பிறர்க்கு நன்மை செய்பவன் தனக்கும் நன்மை தேடிக் கொள்கிறான்.

—ஸெனிக்கா.

6) உலகமே என் நாடு. நன்மை செய்வதே எனது சமயம்.

—தாமஸ்பெய்ன்,

7) தத்துவ ஞானத்தின் குறிக்கோள் அறம்.

—பீட்டர்பெயின்.

புதுவயல் ராம. அருணாசலம்.

வெற்றி பெறுவதற்கு நிறைந்த விடாமுயற்சியையும் பெரும் மனவுறுதியையும் நீங்கள் கொண்டிருக்க வேண்டும். விடாமுயற்சி பெற்றவன், 'சமுத்திரத்தையே குடித்து விடுவேன்', எனது சங்கல்பத்தால் மலைகள் நொறுங்கி விழுந்தாக வேண்டும் என்று சொல்கிறான். அத்தகைய ஆற்றலை, அத்தகைய மன உறுதியை நீ பெற்றிரு. கடுமையாக உழை. உனது குறிக்கோளை நீ அடைவாய்.

—விவேகானந்தர்.

## சாகித்ய அகடமி பரிசு

டாக்டர். ச. மெய்யப்பன் அவர்களைப் பதிப்பாசிரியராகக் கொண்ட மணிவாசகர் பதிப்பகத்தாரின் வெளியீடும், சு. சமுத்திரம் அவர்கள் எழுதிய 'வேரில் பழுத்த பலா' என்னும் நூல் இந்த ஆண்டிற்கான சாகித்ய அகடமி பரிசு பெற்றுள்ளது.

## 'இன்னர்வீல்' இளையராணியாக மூன்று வயதுச் சிறுமி

மதுரை ரோட்டரி கிளப் பெண்கள் அமைப்பான இன்னர் வீல் கிளப் ஆப் மதுரை சிடி, தீபாவளி மேளா நிகழ்ச்சியைத் தமுக்கம் கலையரங்கில் 6, 7—10—1990 தேதிகளில் நிகழ்த்தியது. குழந்தைகளுக்கான பற்பல நிகழ்ச்சிகளில் ஒன்றாக இன்னர் வீல் இளைய ராணிக்கான போட்டியில், முறையூர் ராம. தெ. தெவராயன் செட்டியார் அவர்களின் கொள்ளுப் பேத்தி D. ஜெயலெக்ஷ்மி என்ற மூன்று வயதுப் பெண் இளைய ராணியாகத் தேர்ந்தெடுக்கப் பெற்றாள்.

## பாரதிதாசன் நூற்றாண்டு விழா



# தமிழ்நாட்டு வாழ்த்து

தமிழ்நாடே வாழ்க—எம்
தாய் நாடே வாழ்க
அமிழ்தாகிய இயலிசை கூத்தென்னும்
தமிழாகிய உயிர்தழையும் விழுமிய
தமிழ்நாடே வாழ்க!

இலங்கை சிலம்பும் குமரித் திருவடி தென்பால்
எழிலார் விந்தக் குழலார் வேங்கடம்-வடபால்
கலங்கொள் முத்துக் கடலும் பவழக்
கடலும் கிழக்கு மேற்கில் உடுத்த
தமிழ்நாடே வாழ்க!

குன்றுகள் வான்தொறும் எரிமலை அறியாய்
பெருநில முடையாய் நடுக்க மறியாய்!
தென்றற் குளிரும் செங்கதிர்ச் செல்வமும்
தெண்ணீர் வளவயல் செந்நெலும் கொழிக்கும்
தமிழ்நாடே வாழ்க!

—புரட்சிக் கவிஞர்